[24th March 1958

THE HON. SRI V. RAMIAH : இந்தக் கோரிக்கையை அரசாங்கம் பரிசீலனை செய்து பார்த்தது. இப்படிச் செய்வதனால் விவசாயிகளுக்கு நன்மை ஏற்படுவதைக்காட்டிலும் தீமையே ஏற்படும் என்கிற காரணத்தினால் பொதுவாக எந்தவிதமான அனுமதியும் கொடுக்கவில்லை.

*Mid-day meals*

*** 390 *Q*.—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government propose to grant any subsidies to schools from the Harijan Welfare Fund, to provide for free mid-day meals to Harijan pupils studying in high schools ?**

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

SRI M. S. SELVARAJAN : நம்முடைய ராஜ்யத்தில் நடைமுறையில் இருக்கக்கூடிய இந்த நல்ல திட்டத்திற்கு ஆசி கூறும் வகையிலாவது ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள ஒவ்வொரு உயர்நிலைப் பள்ளியிலுமாவது இந்தத் திட்டத்தை பரீட்சார்த்தமாக ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : நமது அரசாங்கமே இரண்டு உயர்நிலைப் பள்ளிகளை நடத்திக்கொண்டு வருகிறது. அங்கு ஹரிஜன மாணவர்களுக்கு எல்லாவிதமான உதவிகளையும் கொடுத்துவருகிறோம். மத்தியான சாப்பாடு ஹரிஜன மாணவர்களுக்குக் கொடுக்கும் முறையில் $1\frac{1}{2}$ லட்சம். ஒதுக்கியிருக்கிறது. ஆனால் உயர்நிலைப்பள்ளியில் சாப்பாடு, புத்தகம் முதலியவைகளுக்கு ரெஸிடென்ஷியல் ஸ்காலர்ஷிப்புகள் கொடுக்கப்படுகிறது.

SRI P. G. MANICKAM: பள்ளிக்கூட நிர்வாகிகள் ஹரிஜன மாணவர்களுக்கு பிற்பகல் உணவு கொடுப்பதற்கான திட்டத்தை வகுத்துக்கொண்டு அரசாங்கத்தின் உதவியைக் கேட்டால் அதைக் கொடுப்பதற்கு அரசாங்கம் பரிசீலனை செய்யுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : அப்படி யாராவது முன்வந்தால் அவர்களுடைய கோரிக்கை பரிசீலனை செய்யப்படும்.

SRI M. K. SOMASUNDARAM : உயர்நிலைப் பள்ளிகளில் படிக்கக்கூடிய எல்லா ஹரிஜன மாணவர்களுக்குமாவது ரெஸிடென்ஷியல் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படுமா?

THE HON. SRI P. KAKKAN : அத்தனை பேர்களுக்கும் கொடுக்கப் படும் என்று சொல்லமுடியாது.

SRI M. S. SELVARAJAN : தனியார் உயர்நிலைப் பள்ளியில் பிற்பகல் உணவு கொடுக்கப்பட்டு வருகிறது. அப்பேர்ப்பட்ட இடங்களிலாவது எல்லா ஹரிஜன மாணவர்களுக்கும் ரெஸிடென்ஷியல் ஸ்காலர்ஷிப் வழங்க ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : ரெஸிடென்ஷியல் ஸ்காலர்ஷிப் வழங்குவதற்கு சில விதிகள் இருக்கின்றன. மாணவனின் திறம், தகுதி, நிலை எல்லாம் பரிசீலனை செய்யப்பட்டே வழங்கப்படும்.

SRI K. B. S. MANI : கிராமாந்திரங்களில் இருக்கக்கூடிய பள்ளிக்கூடங்களில் ஹரிஜனப்பிள்ளைகளுக்குத் தனிச் சாப்பாடு கொடுக்க முடியுமா ? இப்படிக் கொடுக்க ஏற்பாடு செய்வதனால் சாதி மனப்பான்மை வளருவதற்கு வாய்ப்பு உண்டாகிறதா ? உண்டானால் ஹரிஜனங்கள் என்று தனியாகப் பிரித்துக் கொடுக்காமல் பிற்பட்ட இனத்து மாணவர்களையும் சேர்த்துக் கொடுக்க வசதி செய்யப்படுமா ?

24th March 1958]

THE HON. SRI P. KAKKAN : அரசாங்கம் நடத்துகிற பள்ளிக்கூடங்களில் எல்லாம் இப்பொழுதே அவ்வாறு சேர்த்துத்தான் கொடுக்கப்படுகிறது.

SRI K. ANBAZHAGAN : ஹரிஜன மாணவர்களுக்கு பகல் உணவு அளிப்பதற்கு ஒரு மாணவருக்குக் கொடுக்கும் செலவுத் தொகை நான்கு புதுக்காசு அளவுக்குத்தான் என்று ஒதுக்கியிருப்பதாக தெரிகிறது? அது உண்மையா? உண்மையானால் போதுமா? நடுப்பகல் உணவுக்கு ஒரு மாணவனுக்கு என்ன செலவு ஆகிறது என்று சொல்ல முடியுமா?

THE HON. SRI P. KAKKAN : அதற்குத் தனிக் கேள்வி போட்டால் நல்லது.

## *Electricity for irrigation purposes*

* 391 *Q.*—SRI V. SUBBIAH : **Will the Hon. the Minister for Electricity be pleased to state whether, during the periods of electricity cut, arrangements are proposed to be made to stop the supply of electricity to agriculturists for irrigation purposes during nights and supply only during day time under shift system?**

THE HON. SRI V. RAMIAH : No, Sir.

SRI V. SUBBIAH : விவசாய அபிவிருத்தி பலவகையிலும் பெருக வேண்டுமென்று சொல்லக்கூடிய நமது அரசாங்கம் விவசாயிகளுக்கு மாத்திரம் மின்சார வெட்டு செய்து இரவு காலங்களில் பாசனம் செய்ய வேண்டும் என்று சொல்வது சரியா? சினிமாக்கள், மில்கள் முதலியவற்றிற்கு அதிகமாகப் பகல் சப்ளை கொடுக்கும்போது விவசாயத்திற்கு மாத்திரம் ஏன் கொடுக்கக்கூடாது? இராக்காலங்களில்தான் கொடுக்கப்படும் என்பதைமாற்றி பகல் நேரத்தில் மின்சார வெட்டு இல்லாமல் விவசாயத்திற்கும் கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI V. RAMIAH : இப்போது இருக்கக்கூடிய கஷ்டங்கள் எல்லாம் போகவேண்டுமானால் மின்சாரம் அதிகமாக உற்பத்தி செய்யப்பட வேண்டும். அதற்கு வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும் சர்க்கார் எடுத்துக்கொண்டு வருகிறது.

## *Wattle plantations*

* 392 *Q.*—SRI M. SELVARAJ (on behalf of Sri S. A. M. Annamalai Odayar) : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the purpose for which the Government have acquired about 75 acres of lands with wattle plantations in Mulligoor village, Ootacamund taluk, Nilgiris district; and

(*b*) the basis on which (i) purchase was made and (ii) compensation was paid to the parties concerned?

THE HON. SRI V. RAMIAH : (*a*) In connexion with the execution of the Kundah Hydro Electric Project, 174 acres of land in Mulligoor village in Ootacamund taluk in Nilgiris district consisting of tea, coffee and wattle plantations and waste lands are proposed to be acquired under the Land Acquisition Act.

(*b*) (i) Does not arise as the lands are proposed to be acquired under the Land Acquisition Act.